# உப்புமண்டித்தெரு



'எழுச்சிக்கவிஞர்'

வ.கோ.சண்முகம்

# உப்புமண்டித் தெரு

ஆசிரியர்

'எழுச்சிக் கவிஞர்'

**வ.கோ. சண்முகம்**

தொகுப்பாசிரியர்

**எஸ். ராஜகுமாரன்**

அந்தாதி

எண்.6, 'அஸ்வின் வில்லா', 3வது தெரு,
இராஜராஜேஸ்வரி நகர்,
மடிப்பாக்கம்,
சென்னை - 600 091.

உப்புமண்டித்தெரு ☐ Uppumanditheru

வ.கோ.சண்முகம் ☐ Vaa.Ko.Sanmugam

புதுக்கவிதைச் சிறுகதைகள் ☐ Poetic Short Stories

முதல்பதிப்பு 1979 ☐ First Edition - 1979

மறுபதிப்பு 2007 ☐ Re-edition - 2007

ஒளி அச்சு
தமிழ்க்கூடம், சென்னை-17. ☐ Lazer Typeset
Thamizkkuudam, Chennai-17.

நூல் வடிவமைப்பு
இரா. செல்வசுந்தரம் ☐ Book Design
R.Selvasundaram

மேலட்டை வடிவமைப்பு
பவ்யா டிசைன்ஸ்,
சென்னை - 17. ☐ Wrapper Design
Bhavya Designs, Chennai-17.

பக்கங்கள் - 96 / Pages - 96

விலை ரூ. 45/-/ Price Rs. 45/-

அந்தாதி

எண்.6, 'அஸ்வின் வில்லா', 3வது தெரு,
இராஜராஜேஸ்வரி நகர்,
மடிப்பாக்கம்,
சென்னை - 600 091.

**ANTHAATHI**, 6, 'Aswin willa' 3rd street,
Rajarajeswari Nagar, Madipakkam,
Chennai - 600 091.



தமிழறிஞர் நூல்கள் நாட்டுடமை திட்டத்தின் கீழ்,
2007-2008 தமிழகஅரசு நிதிநிலை அறிக்கையின் வாயிலாக
'எழுச்சிக் கவிஞர்' மாவெண்கோ என்ற
வயலூர்சண்முகம் அவர்களின் நூல்களை நாட்டுடமை
ஆக்கிய தமிழக முதல்வர்
'முத்தமிழறிஞர்' டாக்டர் கலைஞர்
அவர்களுக்கு நன்றி!

## 'எழுச்சிக் கவிஞர்'
# வ.கோ. சண்முகம்
## வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | வ.கோ. சண்முகம் |
| புனைப்பெயர்கள் | : | மாவெண்கோ, செம்மல், வயலூார்சண்முகம் |
| பிறப்பு | : | 20.02.1924 |
| பிறப்பிடம் | : | வயலூார் கிராமம், திருவாரூர் மாவட்டம் |
| பள்ளிக்கல்வி | : | போர்டு ஹை ஸ்கூல் - திருவாரூர் |
| கல்லூரிக்கல்வி | : | இண்டர்மீடியட், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் - சிதம்பரம் |
| படைப்புகள் | : | முரசொலி, திராவிட நாடு, அறப்போர், கலைக்கதிர் |
| பிரசுரமான பத்திரிகைகள் | : | பிரசண்ட விகடன், கண்ணன், விஜயா, தமிழ் சினிமா, கல்கி, கோகுலம், ஆனந்தவிகடன், மாதஜோதிடம், பால்யன் |

கவிதைகளின் காலம் : மரபுக் கவிதைகள் -
1940 முதல் 1980 வரை
புதுக்கவிதைகள் -
1970 முதல் 1980 வரை

நூல் விவரம் : 1.தெற்கு ஜன்னலும் நானும்
(மரபு மற்றும் புதுக்
கவிதைகள் தொகுப்பு)
: 2.டாணா முத்து
(சிறுவர் கதைப் பாடல்கள்)
: 3. சின்னப்பூவே மெல்லப் பாடு
(குழந்தைப் பாடல்கள்)
: 4. எதைத் தேடுகிறாய்?
(தத்துவக் கவிதைகள்)
: 5. நடந்துகொண்டே இரு
(இளைஞர் கவிதைகள்)
: 6. மெழுகுச் சிறகுகள்
(மரபுக் கவிதைக் கதைகள்)
: 7. புதிய தெய்வம்
(புதுக்கவிதை நாவல்)
: 8. அன்னை ஒருத்தி
(அஷ்டலட்சுமி காவியம்)
: 9. உப்பு மண்டித் தெரு
(புதுக்கவிதைச் சிறுகதைகள்)
: 10. வென்றார்கள் நின்றார்கள்
(பல்துறை சாதனையாளர்கள் பற்றிய
கவிதைகள்)
: 11. தைப்பாவாய்
(மொழி, பண்பாடு சார்ந்த கவிதைகள்)
: 12. பாருக்கெல்லாம் பாரதம்!

| | | |
|---|---|---|
| இலக்கிய நண்பர்கள் | : | தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர்,<br>'உவமைக் கவிஞர்'சுரதா,<br>கவி.கா.மு.ஷெரீஃப்,<br>திரைப்பட வசனகர்த்தா ஆரூர்தாஸ்,<br>'டார்ஃபிடோ' ஜனார்த்தனன்,<br>திரைப்படத் தயாரிப்பாளர்<br>இராம.அரங்கண்ணல்,<br>'சின்னக்குத்தூசி' தியாகராஜன் |
| இறுதி வாழ்வும் மறைவும் | : | 23.07.1983 |
| | : | தளத்தெரு கிராமம், காரைக்கால் (புதுச்சேரி மாநிலம்) |

# பதிப்புரை

தமிழ்க்கவிதை வரலாற்றில் புதுக்கவிதைக்கு என்று ஒரு தனித்துவமான இடம் உண்டு. எழுபதுகளில் பெரும் இயக்கமாகவே கிளர்ந்தெழுந்த இந்தக் கவிதை வடிவம், கவிதை படிப்பவரையும், கவிதை படைப்பவரையும் அதிகமாக்கிற்று என்றே சொல்லலாம். அதற்குக் காரணம், மரபுக் கவிதையின் இலக்கணத்தைவிட எளிய இலக்கணம். இயல்பான வடிவம்.

மரபுக் கவிதையில் தேர்ந்த கவிஞராக விளங்கிய 'எழுச்சிக்கவிஞர்' வ.கோ. சண்முகம் புதுக்கவிதைகள் எழுதத் தொடங்கினார். இவருடைய புதுக்கவிதைகள் 'தெற்கு ஜன்னலும் நானும்' என்ற நூலாக வெளிவந்திருக்கிறது.

புதுக்கவிதையின் வடிவத்தைப் பயன்படுத்தி புதுமுயற்சி செய்யும் நோக்கில், சிறுகதைகளை புதுக்கவிதை நடையில் அவர் எழுதிய 'புதுக்கவிதைக் கதை'களின் தொகுப்பே இந்த நூல்.

சரளமான நடையில் கவிதைத்தனமாக இவர் கதை சொல்லும் பாங்கு, சுவையானது. இந்த நூல் புதுக்கவிதைக் களத்தில் புதுமையானது. ஆழமானது. இந்த அற்புத கவிதைக்கதை நூலை வெளியிடுவதில் அந்தர்தி பெருமகிழ்ச்சி கொள்கிறது!

அன்புடன்
பதிப்பகத்தார்

உள்ளே...

# சந்ததி!

தொடர்வண்டிச் சந்திப்பு ஒன்றின்
பெட்டிக் கடையில் -
சோடா, பீடா
சுருட்டு, பீடி
வகையாறாக்களுக்கு
மத்தியில்
வைக்கப் பட்டிருந்த
'அது'
என் கைப்பைக்குள்
இருபது நிமிட பேரத்தில்
'இரண்டு ரூபாய்' விலைக்கு
வந்ததே
ஒரு விந்தைதான்!

கலைஞர்களின்
கை வண்ணத்துக்கு
என்றுமே

மயக்க மூட்டும்
மஹா சௌந்தர்ய வீச்சுள்ள
'இரண்டே இரண்டு'
மூர்த்திகளில் -
அதுவும் ஒன்று!

"மூக்கு நுனியிலே மட்டும்
துளி உடைஞ்சு இல்லேன்னா
எட்டு ரூபாய்க்குக் குறைஞ்சி
இதை நம்பகிட்ட
அவன் வித்திருக்கமாட்டான்!" என்றார்
என்னோடு வந்த
நண்பர்!

கடைக்காரன் பிசிறியதையும்,
நான் மூக்குநுனி மூளிபட்டிருப்பதை
"பேர தந்திர"மாகச்
சுட்டிக் காட்டியதையும்,
அதனால் - அதற்கு அவன்கேட்ட
'எட்டு' எப்படியோ
'இரண்டுக்குச் சமைந்ததையும்,
நாங்கள் வீடு திரும்பும் வரை
புகழ்ந்து கொண்டே வந்தார்!
நண்பர்!

மறுநாள் என்னிடம்
அவர் வாங்கச் சொல்லி இருந்த
'கைமாத்து' இருநூறுக்கு

இது 'அட்வான்ஸ் ஐஸ்' என்பதும்
உண்மையில் நான்
மூக்கு மூளியான அதை
'முழுசா ரெண்டு ரூபா' கொடுத்து
வாங்கியது அவருக்குப்
பிடிக்கவில்லை என்பதும் எனக்குத் தெரியும்...!

அந்த அது-
அவரைப் பொறுத்தவரை
ஒரு மூளிப் பொம்மை!

எனக்கோ
ஒரு போதி நிழல்!
தேஜ வனம்!

அதன் மௌன உதடுகளில்
ஒரு மானுட மோட்சகோஷம்!

**தம்மம் சரணம் கச்சாமி!**
**சங்கம் சரணம் கச்சாமி!**
**புத்தம் சரணம் கச்சாமி!**

மறு நாளிலிருந்தே
அந்த மஹா மூர்த்தி
எங்கள் பூசைமாடத்தருகே
மங்கலமான, சாந்தி மயமான
பூர்ணச் சந்திரப் புன்னகை யோடு
கொலுவேறி விட்டார்!

காலச்சக்கரம்
சுழன்று,
சுழன்று,
ஓடியபிறகு
ஒருநாள்.

எங்கோ போய்
வீடு திரும்பிய
எங்களை
அந்த அதிர்ச்சிதான்
வரவேற்றது!

எங்கள்
செல்லப் பிள்ளையின்
விளையாட்டு விஷயம்
சாந்தக் கொலுவிருந்த
காந்தக் கருணையை-

அந்த அகிம்சா மூர்த்தத்தை-
இம்சித்து
உருச்சிதைத்து-
உடை சில்லாக்கி-
வாசல் முற்றத்தில்
பாசப் பிள்ளை
வீசி எறிந்தான்!

அந்தச்
சாந்திமயமான

பூர்ணச் சந்திரப்
புன்னகையை
மண்குப்பையாக்கி விட்டிருந்தான்!

பாபங்களை அறிய முடியாத
பால்யப் பிஞ்சு!

கோபங்களால்
பாடம்
கொடுக்க முடியாத
கொழுந்து உள்ளம்!

“போயும் போயும்
ஒரு மூளிப் பொம்மைக்காக...”
என்று
என்னை சமாதானப்படுத்த
வந்தத்
துணைவிக்குக் கூட

சில வினாடிகளிலேயே
என் கண்ணீர்
எவ்வளவு ஆழத்திலிருந்து
பீறிடுகிறது
என்பது புரிந்து விட்டது!

மழலைக்கும்
என் கண்ணீர்
குழப்பமான பீதியை ஊட்ட,



தாயின் மடிக்குள்
தலை புதைத்துக் கொண்டு விட்டான்!

காலச் சக்கரம்
கடும் வேகத்தோடு
உருண்டு
உருண்டு
இப்போது
வெகுதூரம் போய்விட்டது!

உலக வீட்டில்
ஒருமூலை...!

அங்கே சில
அரக்கச் சிசுக்கள்!

அந்தச் சிசுக்களுக்கு
எழுபது
எண்பது
வயதுகளிலும்
ஏறிய சிம்மாசனத்தை விட்டு
இறங்காத
அதிகார
அம்மா அப்பாக்கள்!

அவர்களின்
எதிரேயே
அரக்கச் சிசுக்களும்
பழைமையைப் பொசுக்கும்

பண்டிகை விழா!

விழா நிரலின்
முதல் நிகழ்ச்சி

மூளி மானுடத்தின்
மூர்க்கத்தையே
தனது
"சாந்தி மயமான
பூர்ணச் சந்திர
புன்னகைப்
பிரபையால்
போக்க வந்தப்
பொன் வெங்கல
மஹா மூர்த்தங்கள்;
மஹா சௌந்தர்யக்
கலா ரூபங்களையே
காலடியில் போட்டுடைத்துக்
காசு பெறாத
தூசியாக்குவது தான்!"

அந்தத் தூசியின்
ராட்சச நெடியைத்
தாங்கிக் கொள்ளத்
திராணியற்று
உலக வீடு
மௌனமாகக்
குமுறும் போது...

என் வீட்டுப் படிப்பறையின்
ஏழைச் சுவரில்
ஒரு ஓவியம்...!

அதிலே
"அதே அதே
சாந்திமயமானப்
பூர்ணச் சந்திரப்
புன்னகை" !

நான் புளகித்தேன்!

புளகித்துக் கொண்டே
இருக்கின்றேன்!

அன்று
உடைத்த
விரல்களே
இன்று
படைத்து
விட்ட
மஹா ஓவியம்!



# ஒரு தந்தையும் இருக்கிறார்...!

சேடை கட்டி
அண்டை இட்டுக் கொண்டிருந்த
அந்த 'மண்வெட்டி மனிதனை'க் கண்டு,
கையில் டிரான்ஸிஸ்டரோடு,
காலில் வண்ணச் செருப்புப்
பளபளக்க வந்தவன்,
சற்று அருவருப்போடு எட்டியே-
ஒரு கருவேல நிழலுக்குள்ளேயே
நின்று விட்டான்!

சேற்றுப் படுகையாக
கழனிப் பங்குகள்!
அழுகிய தழை உர வாடை!

"ஏண்டா தம்பி!
என்னா சங்கதி...
செருப்ப கழட்டிப் போட்டுட்டு
இஞ்ச வாடா...!"

அண்டை போட்டுக் கொண்டிருந்த
'மண்வெட்டி' குரல் கொடுத்தது!

தழைஉர வாடையில் ஏற்கெனவேயே
முகத்தைச் சுளித்து கொண்டிருந்தவனுக்கு
அப்பனின் ஆணையும்
அழைப்பும் ஆத்திர மூட்டின!

"நான்ஸென்ஸ்!
ஒனக்கு வர வர
மூளைக் குழப்பம் அதிகமாவுது!
லோன் பணத்தை இன்னைக்கே
கட்டியாவணுமாம்.
ப்யூன் வந்து
கடுமையாச் சொல்லிட்டுப் போறான்!
அதைச் சொல்லி
ஒன்னைக் கூப்பிட வந்தா
என்னை நீ
சேத்திலே இறங்கி வாடாங்கிறே!
ஒன்னோட வச்சிக்க அதையெல்லாம்
நான் ஒம் மகன் உலகப்பன்தான்...!
ஆனா இந்த உலகப்பன் காலு
என்னைக்குமே
சேத்திலே படாது... தெரிஞ்சுக்கோ...!"
உதவிக்கு வேலை செய்து
கொண்டிருந்த இரண்டு, மூன்று
விவசாயக் கூலிகள்
தந்தையையும் - மகனையும்

ஒரு மாதிரியாக
மாறி மாறிப் பார்த்தனர்...!

உலகப்பன்,
ஓட்டமும் நடையுமாக வீட்டுக்குத்
திரும்பி விட்டான்...!
தேர்தல் நேரத்தில்
இந்த மாதிரி 'உலகப்பன்'களுக்கே
திடீர் உத்யோகம் - உல்லாச கார் சவாரி
உடனடி ஊக்கத்தொகை
எல்லாம் வலியக் கிடைக்குமே!

அதுவும்,
அந்தத் தொகுதி வேட்பாளரின்
அந்தரங்கத் தோழர்களில்
முன்னணிச் செயல் மறவனாக
உலா வந்தவன் உலகப்பன் தானே...?

அவனுக்குக் 'கட்சித் தொண்டு'
'கொள்கை விளக்கம்', 'தேர்தல் பிரச்சாரம்'
இவைகளை விடவா
அப்பன் அய்யாக் கண்ணுவின்
'அண்டை போடும்', 'களை எடுக்கும்'
'நாற்று பறிக்கும்', 'அறுப்பு அறுக்கும்'
கலப்பை விவகாரம்
ரொம்ப உசத்தி...!
ச்சே...!

மகனின் மன ஓட்டம்
அய்யாக்கண்ணுவுக்கும்
அத்துபடியானதுதான்!
பல தடவைகளில்
அதை கட்டுப்படுத்தியும்
கட்டாயத் தடைவிதித்தும்
கெஞ்சிப் பார்த்தும்
தோற்றுப் போய் சுருண்டவன்தான்
அய்யாக்கண்ணு!

இருப்பினும்
உலகப்பனது இப்போதைய
உஷ்ண மிக்கச் சிற்றுரை
அய்யாக்கண்ணுவுக்கு
அடக்க முடியாத
ஆத்திரத்தைக் குத்திக்
கிளப்பி விட்டு விட்டது!

கிளம்பி விட்டான் வீட்டுக்கு!
'லோன்' பணம்
அன்றைக்கே - கட்டி விட வேண்டிய
நிர்பந்தம் வேறு
அவனது அமைதியான
சுபாவத்தையே சூடாக்கி விட்டது!

அய்யாக்கண்ணு
வீட்டுக்குள்

நுழையும்போது
தனது
அம்மாவிடம்
'வெஞ்சனமாக
வருகலும்
அப்பளமும் இல்லை' என்பதற்காக
சாப்பிட மறுத்து,
சத்தியாக்கிரகம்
செய்து கொண்டிருந்தான்
செயல் மறவன் உலகப்பன்!

உள் உஷ்ணத்தை
உதட்டுக்குள்ளேயே
அடைக்க முயன்று
முடியாமல்
காறிக்; கனைத்து;
இருமிக் கொண்டுப்
புழக்கடைப் பக்கம்
போனான் அய்யாக்கண்ணு!

தடிமாடாக
உலகப்பனை வளர்த்து
உதவாக்கரை யாக்கிய
புண்ணியவதி
அப்பளமும் வருகலும்
அவசரம் அவசரமாகத்
தயாரித்து கொண்டு வந்தாள்!

"சட்டுபுட்டுன்னுச்
சாப்பிட்டுட்டுப் போ...
அப்பா கோவமா
இருக்காங்க போல இருக்கு!"
என்றாள்.

நாலு பொறித்த அப்பளங்களையும்,
தட்டு நிறையப்
உருளை வறுவலையும்
அப்படியே
தன் சாப்பாட்டு தட்டுப் பக்கம்
தள்ளிக் கொண்டு
சொரைக்காய்க் குழம்பை ஊற்றிச்
சோற்றைப் பிசைய
ஆரம்பித்தான் உலகப்பன்!

வலது கை
சோற்றில் இருக்கும் போதே
இடது கையால்
ஒரு அப்பளத்தை எடுத்து
வாயில் வைத்துக் கடிக்கப்
போனான்
வயிற்றுப் பசியோடு இருந்த
செயல் மறவன் உலகு!

அப்போது;
புழக்கடையிலிருந்து,
தனது

முகம் கைகால்களைக்
கழுவிப் பார்த்தும்
உஷ்ணத்தைத்
தணிக்க முடியாத
அய்யாக்காண்ணு
அடி பட்ட வேங்கையாக
வீட்டுக் குள்ளே
விரைந்து வந்தார்!

'கட்சி மாப்பிள்ளை',
'செயல் மறவர்',
அப்போது தான்
தட்டிலிருந்து
சோற்றுக் கவளத்தை
உருண்டையாக்கி
வாய்க்குக் கொண்டு போக
வலது
கையை நகர்த்தினான்!

இடது கையில்
தேய் பிறைபோல அப்பளம்!
"டேய்!... உலகப்பா...!
உறுமினார் அய்யாக்கண்ணு!
போடுறா சோத்தைத்
தட்டிலேயே!
தொடாதே
அந்த சோத்த...!

ஒன்னை
ஒதிய மரமா வளர்த்த
ஒன் ஆயா மீது ஆணையா
ஒரே தடவையிலே
சொல்லிடறேன்.
அந்த சோத்தை
இனிமே நீ
இங்கே
தொடவே தொடாதே!

நான்
சேத்திலே நின்னுக்கிட்டு
இருந்தப் போ...!
என்ன சொன்னே நீ?
இந்த உலகப்பன் காலு
என்னைக்கும்
சேத்திலே படவே படாதுனு
சொன்னீல்லே...!

இப்ப
நான் சொல்றேன் கேட்டுக்க...
சேத்திலே கால வைக்கக் கூட
வெறுக்கிற
சோம்பேறிப் பயல்களுக்குச்
சோத்திலே மட்டும்
கை வைக்க
என்னடா உரிமை
இருக்கு?

ஆமாண்டா உலகப்பா!
என்னோடே
அருமை மவனே!
இந்த சோத்திலே
கை வைக்க
இனிமே
துளி கூட
ஒனக்கு இஞ்சே
உரிமை இல்லேடா!

ஏன்னா,
இந்த சோறு
இருக்கே சோறு
அது என்னாத் தெரியுமாடா?

நீ
வயல்லே பாத்தியே
சேறு!
அதாண்டா!
அந்தச் சேறுதான்"!

அய்யாக்கண்ணுவின்
ஆவேசம்,
தன்னையே
ஒரு மாதிரியாக
ஆசு வாசப்படுத்திக் கொண்டு
அடங்கி விட்டது!

செயல் மறவர்
திகைத்துப் போய் விட்டார்!

சில நிமிடங்களுக்குப் பிறகு
தேர்தல் பிரச்சார
நோட்டீஸ் கட்டுகளோடு
எங்கோ
புறப்பட்டு போய் விட்டார்!

எவர்சில்வர் தட்டில்
'சொரை'க்காய்க் குழம்பு
ஊற்றிப் பிசையப்பட்ட
சோறு காய்ந்து
பருக்கையாகிக் கொண்டிருந்தது!

தட்டிலிருந்த அப்பளங்களையும்
வருகல்களையும்
வீட்டிலே வளர்ந்த
செல்லப் பூனைகள்
ருசி பார்த்துக் கொண்டிருந்தன!



# கலையின் முகவரி!

தொடர்வண்டிச்
சந்திப்புக்குள்
வந்து நின்ற
வண்டியின்
முதல் வகுப்புப்
பெட்டியிலிருந்து
தனிச்செயலர் இறங்கி
வெப்பப்பாத்திரம் சூழ
உணவறைக்கு ஓடினார்...

பத்து நிமிடத்தில்
காப்பியோடு
திரும்பிய
தனிச்செயலரின் முகம்
சினத்தால்
கொதிப்பேறி இருந்தது...!

"காப்பி எக்ஸலண்ட்!
அரோமா என்னமா
இருக்கு பாத்தியா...?
இங்கெல்லாம் கூட
இப்படி
டிகிரி காஃபி கிடைக்குதே... உம்...!
சரி சரி -
நீ குடிச்சியா...?
என்னாப்பா, 'உம்'னு இருக்கே...?"

தலைவர்
அதட்டலாகக் கேட்டார்.!

"நம்பளை அவமானப் படுத்தி இருக்காங்க,
சும்மா விடக்கூடாது அண்ணே,
முதல்லே வண்டியே விட்டு இறங்கி
வாங்க, சொல்றேன்...!"

தலைவருக்கு
தன் தனிச் செயலருக்கு
ரொம்ப அன்னியோன்யம்!

"அவமானமா, நம்பளையா?
என்னாப்பா இங்கே பதட்டம்?"

வியப்போடு இறங்கி
தனிச்செயலர் பின்னால் போனார்!

அதற்குள் -
அவரை
அடையாளம் கண்டு கொண்ட
தொடர்வண்டி சந்திப்பு வாசிகளுக்கு
ஒரே குதூகலம்!

"வருக! வாழ்க!!"
இவைகளோடு
விசில்கள்...!!
கசமுசாக்கள்...!!
பாப் ஸ்டார்ன்னா சும்மாவா?

தொடர்வண்டி சந்திப்பை ஒட்டி
ஒரு
புது
பொதுக் கழிப்பிடம்!

கட்டடம் புதுசு
என்றாலும்
'பாணி' பழசு!

முகப்புச் சுவரில்
'ஆண்' - 'பெண்'
கைச் சித்திரங்கள்...!

புராணிகமான
புராதன முறை!

"பாருங்கண்ணே...!
இந்த அயோக்கியத் தனத்தை!"

அந்த 'ஆண்படட'த்தைச்
சுட்டிக் காட்டிய
தனிச்செயலர்
ஆவேசமாகக் கத்தினார்!

"முட்டாள்தனம்!
இதை இப்பவே கலைக்கணும்...
இல்லேன்னா...!"

தனிச்செயலரை அமைதிப்படுத்தி
"ஒண்ணும் தப்பில்லே!
அவமானம் ஏதுமில்வே!!"

என்று கூறி
அன்போடு
புன்னகையோடு
அழைத்துக் கொண்டு
கூட்டத்தையும்
கும்பிட்டவாறே
விலக்கிக் கொண்டு
தனது பெட்டிக்குள்
போய் அமர்ந்து கொண்டுவிட்டார் அவர்!

தனிச்செயலருக்கு
தலைவரின் அமைதியும்

புன் சிரிப்பும்
புதிராக இருந்தன!
எரிச்சலாகவும் இருந்தன!

"ஏம்ப்பா இதைப்போய்
அவமானமா எடுத்துக்கிறே...?"
எங்கோ தொலை தூரத்தில் உள்ள
இந்த தொடர்வண்டி சந்திப்பு
கழிப்பறை படத்திலே
என்னையே உரிச்சு வச்சாப்பிலே
எழுதி இருக்கான்னா...

'ஆண்' படம் போடறப்போ
என்னோடு உருவம்தான்
அதை தீட்டின ஓவியனுக்கு
வந்திருக்குன்னா என்ன அர்த்தம்...?

ஜனங்களிடத்தே அந்த அளவுக்கு
நான் நினைப்பிலே இருக்கேன்னுதானே-
என் புகழ் ஒளி பொங்கிகிட்டு
இருக்குன்னுதானே அப்ப அர்த்தம்.!
இதுதான் நெசமான புகழ்...!
இதுதான் கலையின் முகவரி!

தனிச்செயலர் புரிந்து கொண்டு
விட்டதாய்
தலையாட்டினார்!



# ஓ! அமெரிக்கா!

வீட்டுக்குள்
விருந்து
தயாராகிக் கொண்டிருந்தது...

தோட்டத்தில்
வேலி அடைப்பு வேலை
பாதி முடிந்த நிலை...

பணியாட்கள்
எட்டி இருந்த
இன்னொரு
பழைய வீட்டுத் திண்ணைக்குப் போய்
சாய்ந்து
புரண்டு கொண்டிருந்தனர்.

நகராண்மைக் கழகச்
சங்கு

பனிரண்டுக்காக
ஊதி ஒய்ந்தது கூட
அந்த பணியாட்களின்
செவிகளில் நுழையவில்லை.

சமீபத்திய
தேர்தலில்
'டெபாஸிட்' இழந்தவர்களின்
பூர்வாஸ்ரமப் புராணங்களை
அவர்களின் வாய்கள்
அசைபோட்டுக் கொண்டிருந்தன...

வீட்டுக்காரர்களின்
விருந்து
அவர்களுக்கும்
எதிர்பாராத
இனாமாக
'மதிய உணவாக'க்
காத்திருந்தது...

காலையில்
அவர்கள் கொண்டு வந்த
அலுமினியத் தூக்குகளுக்குள்
தயிர்ச்சோறு
தனது
அறிதுயிலைக்
கலைக்க வில்லை!



தோட்டத்து
வேலி அடைப்பு வேலையைக்
கண்காணித்துக்
கொண்டிருந்த
எஜமானர்
தனது
'முதுமை நாற்காலி'யிலிருந்து

திடீரென்று எழுந்து
மாடியில் உள்ள
தனது
தனியறைக்குப்
போய் விட்டார்!

திடீர் மறதி-
திடீர் கோபம்-
திடீர் முடிவு-
நகைச்சுவை
உருவமான
அவர்
ஒரு 'சுயசர்வாதிகாரி!'

எதையும்
தானே பார்க்க வேண்டும்
தானே செய்ய வேண்டும்
என்ற
கண்டிப்பும்

சுயக்கட்டுப்பாடும்
உடையவர்!

ஸ்டேட்ஸிலிருந்து
விடுமுறைக்கு
வீடு திரும்பியிருந்த
தனது மூன்றாவது
பிள்ளைக்காக
நடத்தப்பட்ட
அந்த விருந்தின்
'உணவுநிரல்' கூட
அவர் தயாரித்ததுதான்...!

அன்றைய 'சிறப்பு' களில்
ஆப்பிள் பாயசம்!
காய்கறி வடை
இப்படிப் பல...!

வழக்கம்போல -
'ருசி' பார்க்க
அவருடைய
'பாதியாள்'
பெரிய
எவர்ஸில்வர் டம்ளரில்
ஆப்பிள் பாயசமும்
தட்டு ஒன்றில்
காய்கறி வடை

வகைகளும்
எடுத்துக் கொண்டு
கொல்லைப்புற
வாசற்படியருகே
முதுமை நாற்காலிக்குக்
வந்தார்!

அப்போதே
கணவர்தான் மாடிக்கு
போய்விட்டாரே!

தோட்டத்துப் பக்கம்
போயிருப்பார் என்ற
அனுமானத்தில்
தான் கொண்டு வந்த
மாதிரிகளை
அங்கேயே வைத்து விட்டு
அடுக்களைக்கு மீண்டும்!
திரும்பினார்

மூத்த மருமகனின்
கட்டைக் குரல் வேறு
அவரை
அவசரப்படுத்தியது...!

அடுத்த
அரைமணிக்குப் பிறகு
விருந்து வீடே

அருவருப்பிலும்
ஆத்திரத்திலும்
கொதித்தது...!

மருமகள்களோடு
சேர்ந்து கொண்டு
வீட்டுக்கார அம்மாளும்
'காச் மூச்' சென்று
கத்தினாள்!

மரியாதையைக் கூட
நீர்த்துப் போக விட்டு,
"என்னாங்க...
பாத்துக்கிட்டு
இடிச்ச புளி மாதிரி
நிக்கிறீங்க...!"

அந்த
நாத்தப் பய தோலை
நார் நாராக் கிழிச்சில்லே எறியணும்...
பன்னிய வீட்டுக்குள்ள நுழைய விடுற
அளவுக்கு இருந்தா...

என்று "சரி சரி
முதல்லே ஒந்
திருவாயே மூடு...!"
பதற்றத்தோடு
வேலி அடைக்க வந்த

கூலி ஆட்களும்
கொல்லைப் புறத்தில் வந்து
கூடி விட்டனர்!

அவர்களுடைய
சிற்றுண்டி பாத்திரங்கள் சில
திறந்தும்

உருண்டும்
அறி துயிலில் இருந்த
தயிர்ச் சோறு
அங்கும் இங்கும்
சிதறியும் கிடந்தன!

'என்ன அக்கிரும்பய்யா இது...?'
கூலிகளின்
ஆத்திரப் பார்வைகளும்
'அம்மாக்களோடு' சேர்ந்து
கொல்லைப் புறச்
சாக்கடை ஓரம்
கூனிக்குறுகி நின்ற
'அவன்' மீது
பாய்ந்தன...!

மார்கழி ஊதலில்
நடுங்குவது போல்
மார்பில் பதித்திருந்த
அவனது

கரங்கள் நடுங்கின!
வாய் குழறியது!

“எசமான்...
பெரிய மனசு பண்ணி
மன்னிச்சிடுங்க...!
வேணுமின்னா
கொண்டாந்து விட்டேன்?

என்னையும்
ஏமாத்திப்புட்டு
அந்த பீடை
இங்கே வந்து புடுச்சிங்க...!

இதுக்காக
எசமான்
தருமதுரை நீங்க
என்னா அவதாரம் போட்டாலும்
என் உசிரேக் கொடுத்தாலும்
கட்டிப்புடறேங்க...!”

எசமானர் இடை மறித்தார்
“போதுண்டா வசனம்...!
புத்தி கெட்ட பயலே!
எதிலேயுமே
ஜாக்கிரதை வேணும்டா...!
மேய்க்கிற பயலுக்கு

ஏய்க்கிற மூதேவியைத்
தெரிஞ்சுக்க வேண்டாமாடா...

அவதாரமா போடணும்
அவதாரம்!

அடுத்த நிமிடம்!"
கூலி ஆட்கள்
பக்கம் திரும்பினார்...

"ஏம்ப்பா...
ஏதோ விருந்து சோறு
கிடைக்கும்னு
கேள்விப்பட்டவுடனேயே
கொண்டு வந்த
பழைய சோத்தை
கொல்லையிலே
போட்டுட்டுப் பதினோரு மணிக்கே
போயிடணுமா?

வந்த வேலைய
கவனிக்காமே
டெபாசிட் கணக்கா எடுக்குறீங்க...?

நானும்
மாடியிலே இருந்து
கேட்டுக்கிட்டுதான் இருந்தேன்...!

விருந்துச் சோறும் இல்லை
மருந்துச் சோறும் இல்லே!
போய் வேலைய முடிங்க-
மீதிப்பக்கத்து
வேலியையும் அடைச்சுப்புட்டுதான்
வீட்டுக்குக் கிளம்பணும்!
போங்க! போங்க!"

மாடிக்குப் போய்விட்டார்!
அவருடைய கோபம்,
சுயதவறின் உறுத்தல்
தணியும் வரை
சாப்பிடவே மாட்டார்!
அவர் வழக்கம்
அப்படி...!

நாற்பது ரூபாய் புது எவர்சில்வர்
போனஸாகத்
தட்டோடு
'அந்தத் தோட்டிக்கு
மொய்' எழுதப்பட்டு விட்டதால்
மூன்று மருமகளும்
கோரஸாக
தன் மீது படிக்கும்
குற்றப் பத்திரிகையையும்
பொருட் படுத்தாமல்
மூலையில் கிடந்த
ஸோபாவில் விழுந்து

பொருமினார்
எஜமானி அம்மாள்...!

இந்தக் கூத்துகளை
ஒரு
பொழுது போக்கிற்காக
அமைதியுடன்

ரசித்துக் கொண்டிருந்த
அமெரிக்காத் தம்பி
தனது
ஸ்விட் ஹார்ட்டிடம்
உற்சாகமாகச் சொன்னார்:

"டாடியின் டிஸிஷன்
ரொம்ப ரொம்ப
டீஸண்ட்!
ஃபைன்!!
ஃபன்னி!!"



# கட்டு!

ஒரு குக்கிராமத்திருந்து
நாட்டுமாட்டு வண்டி ஒன்று
நகரத்தை நோக்கி
ஆமையாக
ஊர்ந்து கொண்டிருந்தது...!

அந்தச் சாலை
ரொம்பவும் மோசமானது!
மேடுபள்ளங்கள் நிறைந்தது

அந்த வண்டியில்
நாலைந்து பேர்களுக்கு
நடுவில்
தன்னையே மறைத்துக்
கொண்டிருப்பவர் போல -
ஒரு மாதிரியான
கலவரத்துடன்

காணப்பட்ட ஒருவர்
"சீக்கிரம் போப்பா...!"
என்று
வண்டியோட்டியிடம்
கெஞ்சுவதுபோல் சொன்னார்!

சண்டி மாடுகள்!
'லொட புடா' வண்டி!
குண்டும் குழியுமாகச் சாலை!
வேகம் எங்கிருந்து வரும்?

அந்த 'ஒரு மாதிரி பேர் வழி'க்கு
ஏதேதோ அம்சங்கள்
அவசரங்கள்!

பொழுதுதான் ஓடிற்று!
ஆனால்
வண்டியால்
நகரத்தான் முடிந்தது!

கொஞ்சம் தூரம் போனதும்
வேறு ஒரு
குக்கிராமத்திலிருது
வைக்கோல் வண்டி ஒன்று
வேகமாகப்
பின்னால் வந்தது!

அந்த வைக்கோல் வண்டிக்காரன்
கூண்டு வண்டியோட்டிக்குத்
'தோழன்' போலிருக்கிறது...!

கிண்டலாக
"என்னா அண்ணே!
ஓம் பிளசரு
ஊர்வலக்காரு மாதிரியில்லே
ஊருது!

சரி சரி நான் போறேன்,
நாளைக்குக் காலம்பற
'நாஸ்த்தாவுக்காவுது'
டவுனுக்கு
வந்து சேரு!"

அடுத்த சில நிமிடங்களில்
கூண்டு வண்டியின்
இடது புறத்தில் மாறி, முந்தி
வைக்கோல் வண்டி கூட
வேகமாகப்
போய் விட்டது!

'ஒரு மாதிரி'க்குத்
தாங்க முடியாத
ஆத்திரம்! அவமானம்!

மற்றவர்களை
ஒரு முறைப்பு முறைத்து விட்டு
வண்டியோட்டியைப் பார்த்துப்
“பெரிய சவுண்டிப் பயலா
இருப்பே போலிருக்கே!
தார்க்குச்சியாலே
நாலுகுத்து குத்தி
விரட்டுடா, முட்டாள்!”
என்று கத்தினார்!

அவனிடம் தார்க்குச்சி இல்லை!
சவுக்குதான் இருந்தது!

‘ஒரு மாதிரி’யின்
தீவிர வசவுகள்
அவன் நெஞ்சில்
சவுக் கடிகளாகச்
சுரீரிட்டன!

‘ஒரு மாதிரி’யை அடிக்க
அவனால் முடியுா...?

அதனால்
இரு மாடுகளையும்
நொறுக்கி விட்டான்!

அவைகள்
மிரண்டு வெருண்டு

நாலுகால் பாய்ச்சலில்
ஓடின!
தலை தெறிக்க ஓடின!

பள்ளம் படுகுழிகளில்
விழுந்து எழுந்து-
எழுந்து விழுந்து
லொட லொடத்த
வண்டி ஓடத்துவங்கிற்று!

வழியில்
ஒரு மதகுப் பாலம்!

அந்தப் பால மேட்டில்
வண்டி
வேகமாக ஏறிஇறங்கும் போது -
வண்டியின் வலது சக்கர
இரும்புக் கட்டு மட்டும்
தனியே கழன்று
ரோசத்தோடு
வண்டியின் முன்னேயே
ஓடி
ஒரு குட்டி விளையாட்டை
நடத்தி விட்டு
பக்கத்தில் இருந்த
வாய்க்காலின்
வயிற்றுக்குள்
சரணடைந்து விட்டது!

'ஆ' என்று கத்தி
வண்டியோட்டிக்
குதிப்பதற்குள்
வண்டியின்
வலது சக்கர வட்ட ஆரங்கள்
அனைத்தும்
கோடாலியே தேவைப்படாத
'விறகு' களாகவே
அவதாரம் எடுத்து விட்டன!

கடை சாய்ந்து
கூண்டு நொறுங்கிய
வண்டியிலிருந்து
வந்த
முதல் 'ஐயோ!' வும்
'மேன்மைக்கு'
ஒரு மாதிரியினுடையதுதான்!

மூன்று நாட்கள் கழித்து
இரண்டு காரியங்கள்
நடந்தன!

நொறுங்கிப் போன
வண்டியின்
இதர இரும்புப் பாகங்ளோடு
அந்தத்
'தறுதலைக் கட்டும்
கொல்லுப்

பட்டறைக்குப்
போய் சேர்ந்தது,
புது உருப்பெற!'

மருத்துவ மனையில்
தலையில்
பலத்த கட்டுடன்
பாதி நினைவில்

படுத்துக் கிடந்த
அந்த 'ஒரு மாதிரி' யின்
செவிகளில்
அரைகுறையாக
ஒரு செய்தி
நுழைந்தது!

அது
இது:
இந்த ஆளு
நம்ம கட்சியை உடைக்க
ட்ரை பண்ணியிருக்காரு!
ரயில்லேயும்
மாட்டு வண்டியிலேயும்
ரகசியமாக
நாலைந்து ஊர்களுக்குப்
போய்
யாரு யாரையோ
கரைச்சி கலக்கியிருக்காரு!

அது
'நம்ம'வருக்குத்
தெரிஞ்சு போச்சு!
மூளையிலே பலத்த அடி!
இயக்கப் பணிகளில்
ஈடுபட முடியாத நிலை...
'அப்படின்னு
அறிக்கை விட்டு
சீட்டைக்
கிழிச்சுட்டாரு!
பாவம்!'

பாவம் தான்!



# உப்புமண்டித் தெரு

நகராண்மை தருமத்தின்
அழுமூஞ்சி விளக்குகள்
விழித்துக் கொண்டு விட்டன...

திருவம்பலம் பிள்ளை
தன் சிந்தனைகளை
கசக்கிய படி
நடந்தார்.

உப்புமண்டித் தெரு
ஊரின் கடைசியில்
ஒதுங்கிக் கிடந்தது.

ரவிக்கைத் தோரணங்கள்
அசைந்து அசைந்து
சைகையால் அழைக்கும்
அந்த

ராத்திரி தேசத்துக்கு
எவரும் நேர்வழியில்
போவதில்லை.

சாக்குக்கடை சந்துவழி
நுழைந்தால்
ஒரு ஒத்தையடிப் பாதை
கால் பிடித்து
அழைத்துக் கொண்டுபோய்
உப்புமண்டித் தெருவில்
விட்டுவிடும்.

வெளியுலக பரிணாம
வர்ண ரூபங்கள்
உப்புமண்டித் தெருவிலும்
பதிந்துதான் இருந்தன!

சட்ட - சமூக
மிரட்டல்களால்
உப்புமண்டித் தெருவின்
உடல் வர்த்தகம்
மெலிந்து விடவில்லை என்பதை
பிள்ளை புரிந்து கொண்டார்!

அதனால் -
அவருடைய
நரைத்த நினைவுகளில் கூட
ஒரு சங்கோஜ உறுத்தல்!

இருபது வருடங்களுக்கு
முன்பான இளமையை
இப்போது
மறுஒளிப்பதிவு செய்தன
அவருடைய நினைவுகள்.

சில்க் பாஜி
கோல்ட்ஃளாக் சிகரெட்
அருணகிரி நாதராக
இதே
உப்புமண்டித் தெருவின்
உல்லாசப் பூக்களிடம்
அவர் விளையாடி
சொகபோக விளையாட்டுகள்
கொஞ்சமா நஞ்சமா ?

வெள்ளமிட்டுப் பொங்கிய
அந்த நினைவுகள்
இப்போது உறுத்த
வலிய அவற்றை
விலக்க எத்தனித்தவராக
கையிலிருந்த
மீன்மார்க் மொத்திக் சுருட்டின்
மீதியை
முழு இழுப்பாக
இழுத்து விட்டு
காலடியில் போட்டு
மிதித்தார்.

இடது கையில்
இருந்த பையை
வலது கைக்கு
வலிய மாற்றினார்.

மாற்ற நினைத்தாலும்
அவருடைய
சிந்தனை
பழைய வாசனைகளை
நுகர்ந்து கொண்டுதான்
இருந்தன.

தன் சந்ததிக்கு
விலாசமிட வந்த
கதிரவனும்
அதே
உப்புமண்டித் தெருவில்
உருளுவான் என்றோ -
வீடு குடும்ப விவகாரங்கள்
மறந்து -
மரத்துப் போவான் என்றோ -
உப்புமண்டித் தெருவின்
பச்சை தேவதைகளின்
பளிங்குத் தொடைகளை
பகலும் இரவும்
தனது

தலையணைகள்
ஆக்கிக் கொள்ளுவான் என்றோ
திருவம்பலம் பிள்ளை
ஒருகணம் கூட
எண்ணிப் பார்த்ததில்லை!

இன்று
எந்த வீட்டின்
தாசனாக
கதிரேசன்
கிடக்கிறானோ
என்று
யோசித்தபடியே
நடந்து கொண்டிருந்தார்!

மகனை
காணாது
கண்ணீரில் குளிக்கும் -
தன் மனைவிடம்
அவனைக் கண்டுபிடித்து
இழுத்துப் போய்விடுவதற்கே
பல ஆண்டுகளுக்குப் பின்
இன்று மீண்டும்
உப்புமண்டித் தெருக்குள்
காலடி எடுத்து வைக்கிறார்
பிள்ளை!

உப்புமண்டித் தெருவின்
உல்லாச வீடுகளில்
மகன்
உறைந்து கிடக்கும்
நிலையை நினைக்கையில்
தனது
இளம்பிராயத்தின்
பாலியல் நாடகங்கள்
நினைவுக்கு வந்ததை
தவிர்க்க முடியவில்லை
பிள்ளைக்கு!

அவரை
வளைத்துப் போட்டு
வசியமாக்கி
தனது
எச்சில் உதடுகளுக்குள்ளேயே
சிறை வைத்திருந்தவள்
கருப்பழகி கனகா!

மாங்கனி நிகர்த்த
மார்பகங்கள்!
தூரிகை வளைவுபோல்
துலங்கும் இடைகள்!
தூண்டில் போடும்
மீன்களைப் போல்
துள்ளும் கண்கள்!

பேச்சும் சிரிப்பும்
ஓசைக் காமம்!

அவள் கைகளால்
ஒருமுறை தழுவப்பட்டவர்கள்
அவளிடம்
ஆயுள் தண்டனை
அனுபவிக்கவே
ஆவல் கொள்ளுவர்!

அப்போது அவளுக்கு
முப்பது வயசு!
திருவம்பலம் பிள்ளையை

விட
மூன்று வயசு மூப்பு!

கருப்புத் தங்கம்
கனகாவிடமிருந்து
திருவம்பலம் பிள்ளையை
பிரிக்க
அவர் தந்தை பட்ட
பாடுகள் கொஞ்சமா ?

"டிங் டிங் டிங்..."
எதிரே வந்த
பாம்பே மிட்டாய் வண்டி

பிள்ளையின்
சிந்தனைகளைச்
சீய்த்தது.

உப்புமண்டித் தெருவின்
ஒற்றை சாரி முடிந்து
வேப்பமரத்து வீடும்
வந்துவிட்டது...

அந்த வீட்டில்தான்
கதிரவன்
அஸ்தமனமாகிக்
கிடக்கிறான் என்று
காற்று வாக்கில்
தகவல் கசிந்தது!

மகனை
வளைத்துப் போட்டிருக்கும்
கைகாரியிடம்
சத்தம் போட்டு மிரட்டி
எப்படியாவது அவனை
வெட்டி விட்டுவிட வேண்டும்
என்று தீர்மானித்தபடி
உணர்வுகளை
உஷ்ணப்படுத்திக் கொண்டு
கதவைத் தட்டினார்.

ஒரு
பனிரெண்டு வயசு
பாவாடை
கதவைத் திறந்து
பிள்ளையை
உள்ளே அழைத்துச் சென்றது...

திறந்திருந்த
ஒரு அறைக்குள்
ஒருத்தியின்
அரவணைப்பில்
திளைத்துக் கிடந்த
கதிரவன் -
திடீரென்று
அங்கு
தன் தந்தையைக் கண்டதும்
அதிர்ந்தான்!

அவளுடைய
மார்பிலிருந்து
தன் முகத்தை
பெயர்த்துக் கொண்டு
சுதாரித்தவனின்
இருபது வயது
இளமேனி நடுக்கிற்று!

நிர்வாண உடம்பில்
துண்டை சுற்றியபடி
அத்துமீறி
அறைக்குள் புகுந்த
ஆசாமி மீது பாய
ஆத்திரத்தோடு
திரும்பிய அவள்
அதிர்ந்தாள்!

"அய்யா! நீங்களா?"
பிள்ளையும்
அதிர்ந்தார்...

"கனகா! நீயா?"

மூன்று
படகுநோட்டுகளை
கனகாவின் முகத்தில்
விட்டெறிந்து விட்டு
"இதோட விட்டுடு இவன!
உனக்குப்
புண்ணியமா போகட்டும்!"
என்று சொல்லியபடி
கதிரவன் கையைப் பிடித்து
இழுத்துக் கொண்டு
அங்கிருந்து வெளியேறினார்
பிள்ளை!

கதிரவனுடன்
வீடு திரும்பிக் கொண்டிருந்த
திருவம்பலம் பிள்ளையின்
நினைவுகள்
கனகாவையும்
அவளுக்குப் பிடித்த
ரவா கேசரியையும்
மாறி மாறி
மொய்த்தன!

ஆவி பறக்கும்
சூட்டில் மட்டுமல்ல!
ஆறி -
நெய் வெள்ளை
படர்ந்த பிறகும்
ரவாசேகரிக்கு
ஒரு வித்யாசமான
சுவை உண்டு -
இன்றைய
கனகாவும்
அப்படித்தானோ!



# பிரேத நதியில் ஒரு பிரவாகம்...!

**அ**வர் -
ஒரு ஆன்மிக வாதி!
ஒரு அறிவு வாதி!
அவருடைய
ஆன்மிகப் பக்தியில்
'நேர்மை' தேளாக இருந்தது!
அவருடைய
அறிவுப் பக்குவத்தில்
'கூர்மை' வாளாக இருந்தது
ஆன் மீகத்தில்
அறிவு வேதமாகவும்
அறிவு முதிர்ச்சியில்
ஆன்மிகப் பாலமாகவும்
அவர் பரிமளித்தார்!
பரிண மித்தார்!
பயன்களைக் காட்டி வந்தார்!

வெறும் அறிவுக் குப்பைகளை மட்டும்
மூளையில் திணித்து கொண்டிருந்த
'விதண்டா வாதிகள்' சிலர்
ஒரு நாள் -
அவரிடம் வந்தார்கள்!
அந்த விதண்டா வாதிகளின்
அடி ஒற்றிகளும்
'ஆமாம், ஐயா!' லோட்டாக்களும்
அவர்களோடு
அவர் வீட்டுக்கு வந்தார்கள்!

அவர்களின் பின்னால்
வீதிச் சோம்பேறிகளும்
வேடிக்கை பஷணிகளும்
அவர் வீட்டில்
கூடத்தொ டங்கினர்!
அவர் -
அவர்கள் அனைவரையும்
அன்பு ததும்பும்
புன்னகையோடு
வரவேற்றார்!
விழிகளின் வியப்பையே
'ஏன்?' ஆக்கினார்!

விதண்டா வாதிகளின்
தலைவர் பெருமான்
விஷமச் சிரிப்போடு
பத்திரிக்கை ஒன்று

பயிரிடத் தொடங்கியிருந்த
'வம்புச் சவால்'
குட்டிக் கட்டுரையின்
வெட்டுத் துண்டை
அவரிடம் கொடுத்து -
"இந்தச் சவாலை
நீங்கள்
ஏற்றுக் கொள்கிறீர்களா...?"
என்று
தடித்த குரலில் கேட்டார்!
கேட்டு விட்டுத்
தன் சகாக்கள் மீது
பார்வைச் சக்கரத்தைச்
சுழற்றினார்!

அந்த
அடி ஒற்றிகளும்
லோட்டாக்களும்
எதிர்ப்பே இல்லா
தங்களைத் தாங்களே
சுய ஆராதனை
செய்து கொண்டனர்!
வேடிக்கை பக்ஷணிகளுக்கோ
வியப்பு வீங்கத்துவங்கியது!
இது -
அவர்களுக்கு

எதிர்பாராத
'இலவச தமாசா' ஆயிற்றே!

அந்தக் கும்பலுக்குள்
ஏழெட்டு
'குழப்பவாதி'களும் இருந்தனர்!
ஓட்டு எண்ணிக்கை
ஏற்ற இறக்கம் மாதிரி
அவர்களுடைய
கருத்துக்களும் குழம்பி
விழிகளும் ஊஞ்சலாடி
விதண்டா வாதத் தலைவரையும்
வேதாந்தக் கிழவரையும்
மாறி மாறிப்
பார்த்து மயங்கின!

பத்திரிகைக் கட்டுரையின்
சவால் வரிகளை
நுனிப்புல் கடிப்பாக
மேய்ந்து விட்ட
அந்த
ஆன்மிக
ஆத்திரமும்
கசப்பும்
ஐம்பது ஐம்பதாக
கலந்த
கம்பீரமான

வெண்கலத் தொனியில்
'நான்ஸென்ஸ்!'
என்ற
ஒரே ஒரு சொல்லைத்
தனது
விளக்கப் பேருரையாக
விடையாக
வீசி எறிந்தார்!

கூட்டம் பரபரத்தது!
கூச்சல் சலசலத்தது!

'விதண்டா வாதத்
தலைவர் பெருமான்'
இப்போது
வீரா வேசமாகக் கேட்டார்!
'எது நான்ஸென்ஸ்?'
இல்லை என்பதா...?

அந்த
ஆன்மிக ஞானி
'இல்லை!' என்று
அதே சொல்லைத்
தனது பதிலாகத் தந்தார்!

"அப்படி என்றால்
'உண்டு' என்பதா...?"

கேள்வியைக்
கொக்கியாக்கி விட்டதாக
எண்ணிக் கொண்டு
கொஞ்சம் கனைத்துக் கொண்டார்
பகுத்தறிவுப் பாசறையாளர்!

“அதுவும் இல்லை!”
அடிக்க வருவதுபோல்
ஆன்மிக தேவனின்
பதில்
ஆவேசத்தோடு வெடித்தது!

விதண்டாவாதி
எழுந்து வந்து
வேதாந்தியை
நெருங்கி நின்றார்!
சுற்றும் முற்றும்
பார்த்துக் கொண்டார்!

“எல்லோரையும் போலவே
நீங்களும் குழப்புகிறீர்கள்!”

“இல்லை! கிடையாது!
நான் குழம்பி இருந்தாலல்லவா
மற்றவர்களைக் குழப்புவேன்!”

“அப்படி என்றால்
நீங்கள்

தெளிவோடுதான்
தீர்மான முடிவோடுதான்
இருக்கிறீர்களா...?"

"சந்தேகம் இல்லாமல்...!"

"சரி; ரொம்ப சரி!
ஒரே வார்த்தையில்
உறுதியாகச் சொல்லிவிடுங்கள்!
கடவுள் உண்டா...?
இல்லையா..."
விதண்டாவாதி உரத்த குரலில் கேட்டார்!

"என்னைப் பொறுத்தவரை
இறைவன்
நிச்சயமாக உண்டு!
சதகோடி விகிதம்
சத்தியமாக உண்டு!
'உண்டு' என்றால்
நீ
அந்தக் கடவுளை
எங்களுக்குக் காட்டுவாயா
என்றுதானே
கேட்க வந்திருக்கிறீர்கள்...?"

"ஆமாம்!
அதற்காகத்தான்
வந்திருக்கிறோம்!"

"சந்தோஷம்!
காட்டுகிறேன்!"
வேதாந்தி கம்பீரமாகவே
சொன்னார்!

கூட்டம்,
போதை ஏறிய
குரங்காகக்
குதிக்கத் தொடங்கியது!

"எங்கே காட்டுகிறீர்கள்...?
கடற்கரையிலா...?"

"எதற்கு கடற்கரைக்குப்
போக வேண்டும்...?
'கடவுளை காணும் சிறப்பு
மாநாடு' போட்டுக்
காசு பார்க்கவா?"

"குத்தல் இருக்கட்டும், ஐயா!
கூப்பிடுங்கள் உங்கள்
கடவுளை முதலில்...!"

கூட்டம் -
குபீரென்று சிரித்தது!
லோட்டாக்கள்,
"சரியான பிடி!" என்றனர்.
வேடிக்கை பஷணிகள்

கும்பலைப் பிளந்து கொண்டு
முன்னுக்குப் பாய
ஆரம்பித்தனர்!

அப்போது தானே
ஆண்டவனை
அருகாமையில்
நன்றாகப் பார்க்கலாம்!

ஆன்மிக வித்தகர்
அதட்டும் குரலில் சொன்னார்:
சர்வேஸ்வரன்,
இந்தப்
பிரபஞ்சப்
பேரண்டங்களுக்கெல்லாம்
ஒரே ஒரு
நிரந்தர
எஜமானன் மட்டும் அல்ல!
அவனே
அனைத்து ஜீவ கோடிகளின்
அன்புச் சேவகன்!
நாணயமும்
நம்பகமும் உள்ள
காவலன்!
அதற்காக -
அதுவும் உங்களுக்காக -
நான் கூப்பிட்டால்

உடனே
ஓடி வரமாட்டான்...!

"அப்படி என்றால்...?"
- விதண்டாவாதி
வெறுப்போடு கேட்டார்!

"நீங்கள் தான்
அவனைப் போய்ப்
பார்க்க வேண்டும்...!"
- வேதாந்தி
அமைதியாகச் சொன்னார்!
"எங்கே கடற்கரையிலா...?"
- விதண்டாவாதி
ஆத்திரத்தோடும்
கிண்டலோடும் கேட்டார்!

"பளீ"ரென்று சிரித்த
பரம நம்பி
பகுத்தறிவுச் சிங்கத்தை
ஏறிட்டுப் பார்த்து
இந்த 'கடற்கரை
மாநாட்டு புத்தி'
உங்களை விட்டுப் போகவே
போகாதா...?" என்றார்.
பகுத்தறிவுப் பெருந்தகையாளருக்குப்
பற்றிக்கொண்டு வந்தது எரிச்சல்!

“கடற்கரைக்கு
உங்கள் கடவுள்
வரமாட்டான் என்றால்
உங்கள் வீட்டு
அடுப்பங்கரையில்
அவனைக் காட்டுங்களேன்!
அதுதான் யோக்கியனுக்கு
ஒழுங்கு...!”

கூட்டத்தில் முக்கால் பகுதி
ஒட்டு மொத்தமாகச்
“சரியான சம்மட்டி!”
என்று
குரல் கொடுத்தது!

ஆன்மிகவாதியும்
“அப்படியே காட்டுகிறேன்...!
ஆனால், ஒரு சின்ன நிபந்தனை...!”
என்றார் தயங்காமல்!

“ஒத்துக் கொண்டு விட்டு
அப்புறம் என்ன நிபந்தனை...?
முணுமுணுத்தார்
அறிவுப் பாசறை அண்ணல்!
கூட்டத்திலும் கசமுசா!

“பேஜாரு புடிச்ச ஆளு!
டக்கு வச்சுப் பேசி

டபாய்க்கப் பாக்கிறான்!
உட்டுடாதிங்க, வாத்தியாரே!'
-இப்படி ஒரு...!
'நைனாக்குரல்!'

நிமிடங்கள் சில
நகர்ந்த பிறகு -
ஆன்மிக ஞானி
கூட்டத்தை நோக்கி
ஆணையிடுவது போல
அதிகாரக் குரலில் சொன்னார்

"உங்களில்
'கடவுள் உண்டு!' என்று
உறுதியாக
உண்மையாக
நம்புபவர்கள் எல்லோரும்
தயவு செய்து
உடனேயே
வெளியே போய் விடுங்கள்!

உங்களில்
'கடவுள் இல்லை!' என்று
உறுதியாக -
இறுதியாக -
உண்மையாக -
முடிந்த முடிவாக

நம்பிக் கொண்டிருப்பவர்கள் மட்டும்
இங்கேயே நில்லுங்கள்!
உம்; சீக்கிரம்; சீக்கிரம்!!"

இதைச் சற்றும்
எதிர்பார்க்காத கூட்டம்
திகைத்தது!
திணறியது!!
அறிவுப்பாசறை
ஆசாமிகள்
லோட்டாக்கள் சிலருக்கே
இப்போது குழப்பம்!

வெளியேற நினைத்த
அவர்களில் சிலரும்
குழப்பவாதிகளும்
மயக்கமடையும் நிலைக்கு
வந்துவிட்டனர்!

முதலில் -
ஒரு சிறுமி
மௌனமாக
மலர்ந்த முகத்தோடு
ஆன்மிக ஞானியைப் பார்த்து
வணங்கி விட்டுப்
புன்னகையோடு
பணிவாகப்

பத்விசாக
எழுந்து வெளியே போனாள்!

வேடிக்கைக் கும்பலில் இருந்த
ஒரு குருக்கள்
ஒரு புரூடா ஜோசியர்
ஏதோ ஏமாற்றத்துடன்
முணுமுணுத்தா வாறே
வெளியேறினார்!

அவர்களைத் தொடர்நது
பட்டை விபூதியோடு
நின்றிருந்த
அறங்காவலர் ஒருவர்
வெளியேறினார்!

பாதி ஆன்மிக வாதியாகவும்
பாதி பகுத்தறிவு வாதியாகவும்
இருந்த
ஒரு இளம் விஞ்ஞானி
திடிரென்று எழுந்து
விதண்டாவாதத் தலைவருக்கும்
வேதாந்த வித்தகருக்கும்
ஏறுபோல்
எதிரே நின்றான்!

ஏன் என்றால்
இந்த



இருட்டுப் புதிர்களின்
பூட்டுகளையெல்லாம்
தான் ஒருவனே
எறிய முடியும் -
எறிய வேண்டும்
என்று
துடித்துக் கொண்டிருந்தான் அவன்!

அந்த
இளம் விஞ்ஞானியை
முட்டித் தள்ளுவது போல்
முன்னே
பாய்ந்து வந்தான்
இன்னொரு இளைஞன்!
அவன்
ஒரு கவிஞன்!
ஜிப்பாவும்
பைஜாமாவும்
சிவப்பேறிய விழிகளும்
'அவனைக்
கவிஞனாக'
அடையாளப் படுத்தின!

உதயத்திலிருந்து
மறுஉதயம் வரை
எப்போதும்
மது நாறும் உதடுகளால்

நாத்திக ஜன்னியிலே
தனது
தத்துவங்கள் உதிர்ப்பவன்!
பேனாவும்
பேப்பருமாக
பிரேதப் பொம்மையாக
இயங்கிக் கொண்டிருப்பவன்!
அக்கவிஞன்
ஆன்மிக ஞானியை
இன்னும்
சமீபத்து நின்றான்!

கூட்டம் இளைத்தது!
கூடக் குறைய
நூறு பேறாக ஆயிற்று!

மீண்டும் அமைதியுடன்
மெய்ஞான வித்தகர்,
"அன்புக்கூர்ந்து கேளுங்கள்!
நான் ஒண்டிக்கட்டை!
கைச் சமையல்காரன்!
என் அடுப்பங்கரை
மிகமிகச் சிறியது!
நூறு பேர்களும்
அதில்
நுழையக் கூட முடியாது!
அதனால்..."



"என்ன அதனால்...?
இனிமேல் பொறுக்க முடியாது!
ஏ ஏய்ப்புக்காரனே...!
நீ
எங்களுக்கு
இன்றே -
இப்போதே
'கடவுள் உண்டு' என்பதை
நிரூபித்தே ஆக வேண்டும்!
நேரிலேயே காட்டியே ஆகவேண்டும்!
இல்லாவிட்டால்
உன்னைச் சும்மா
விட மாட்டோம்...!"

இளங்கவிஞன்
ஆன்மிக வாதியை
இப்படி
'ஏக வசனத்தில்'
சாராய வார்த்தைகளால்
சரமாரியாக மிரட்ட
விதண்டாவாதத் தலைவர்
அவனது
சொல்லுக்குச் சொல்
'ஆமாம்' களைப் போட்டார்!
கூட்டமும்
"என்னைய்யா சொல்றே!"
என்று மிரட்டியது!

"இரண்டே இரண்டு நிமிஷங்களில்
கடவுள் உண்டு என்பதை
நிரூபித்துக் காட்டி விடுகிறேன்!
ஆனால் எல்லோருக்கும் அல்ல!
உங்களில்
ஆறே ஆறு பேர்கள் மட்டும்
என் பின்னால்
உடனே
அடுப்பங்கரைக்கு
வாருங்கள்!"
- இப்படிச் சொல்லி விட்டுத்
தனது
அடுப்பங்கரைக்குள்
நுழைந்தார்
பரமநம்பி!

இளங்கவிஞனும்
இளம் விஞ்ஞானியும்
அவரையும்
முந்திக் கொண்டு
அவரது
அடுப்பங்கரைக்குள்
ஓடினார்கள்!

அவர்களைத் தொடர
அச்சிறு கூட்டம்
முட்டி மோதியது!

விதண்டாவாத மாவீரர்
தன் லோட்டாக்களில்
குள்ளமாக இருந்த
ஒருவரைப் பார்த்து
"டேய்! அறிவுப் பரிதி!
ஓடியாடா என் பின்னாலே!"
என்று
அவசர அவசரமாக
அழைத்தார்!

அறிவுப் பரிதி
அவருடைய மைத்துனர்!
அவருடைய
எதிர்கால மாப்பிள்ளை!
அந்த
எதிர்கால மாப்பிள்ளையும்
விதண்டாவாத தலைவரைத் தொடர்ந்து
அடுப்பங்கரைக்குள் ஓடினார்!

விதண்டாவத தலைவரின்
வாரிசு என்று கருதப்பட்ட
தணலழகன்
இப்போது
தணல் மலையாகவே மாறிவிட்டார்!

தலைவர்
தன்னைக் கூப்பிட்டுக் கொண்டு
போகாத ஆத்திரம்

அவரது நெடிய உடலையே
தகர்த்தது!
தணலழகனும்
பின்னால் திரும்பிப் பார்த்து
'இரணிய தாசா!
வா, என்னோடு!' என்று
ஒரு தோழரை
இழுத்துக் கொண்டு ஓடினார்!

இரணியதாசன்
தணலழகனின்
முடைசடை சந்தர்ப்பங்களின்
அந்தரங்க உதவியாளன்!

ஆக-
ஆறு பேர்கள் மட்டும் அல்ல -
எப்படியோ
எட்டு பேர்கள்
பரம நம்பியின்
அடுப்பங்கரைக்குள்
புகுந்து விட்டனர்!
அவர்களில் ஒருவர்
உள்ளே நுழைந்ததும்
முதல் காரியமாக
அடுப்பங்கரைக்
கதவுகளைச் சாத்தி
கெட்டியாக
உள் தாழ்ப்பாளையும்
போட்டு விட்டார்!

வெளியே
நின்ற நபர்கள்
கொதித்தனர்!
"அயோக்கியன்கள்!"
என்று ஒருவர்
ஏமாற்றத்துடன் கத்தினார்!

அடுக்களைக்குள்ளே-
பரபரப்புடன்
என்ன நடக்கும் என்ற
எதிர்பார்ப்பு அரிக்க
நின்றிருந்தவர்களைப் பார்த்து
பவித்ரமான
அந்த
நுண்ணறிவு வேதாந்தி
பரம நம்பி
"என் இனிய நண்பர்களே!
இன்றே
உங்கள் அனைவரின்
வாழ்வும்
புனிதமாகி விட்டது!
வெற்றி முகடுகளில்
வீரநடை போடத் துவங்கி விட்டது!
நானும்
வென்று விட்டேன்!
பூரிப்புடன்
விடை தருகிறேன்.
போய் வாருங்கள்!

புதுப்பிறவிகளே!
புண்ணியச் செல்வங்களே!"
போய் வாருங்கள்!
- என்று ஆனந்தக் கண்ணீர்
அருவியாகக்
கரங் குவித்தார்!

அந்த எட்டுப் பேர்களில்
குறிப்பாக -
விதண்டாவாதத் தலைவருக்குப்
பரம நம்பியின்
இன்னுரையோ
பொன்னுரையோ
புரியவில்லை!

ஜன்னிக் கவிஞனுக்கு
இதயத்திலோ-
மூளைக்குள்ளோ-
ஏதோ ஒன்று
நெருடிற்று!
அதனால்
உக்கிரமாகப் பிரிந்த
அவனது
உதடுகள் ஊமையாகி விட்டன!

இளம் விஞ்ஞானிக்கும்
மூளை யோட்டத்தில்
ஒரு மின் அதிர்ச்சி!

புரியாத தென்று
பொய்ம்மை என்று
புறக்கணித்து வந்ததை
அவ் விஞ்ஞானி
அக் கணத்திலிருந்து
மெல்ல
மெல்ல
உணரத் தொடங்கி விட்டான்!
அறிவு வீங்களுக்குத்தான்
ஆத்திரம் கொப்பளித்தது!
ஏய், கிழப்பயலே!
கிறுக்கு புடிச்சவனே!
எங்களை எல்லாம்
ஏமாத்தவா பாக்கிறே...?
-'இன்ஸ்ட்டண்ட்ஃபைனான்சியர்'தான்
எல்லோர் சார்பிலும்
தன் ஒற்றை
டப்பாத் தொண்டையால் கத்தினார்!
அப்போதும்
ஆத்திரமடையாத
பரமநம்பி
'இன்னுமா, புரியவில்லை உங்களுக்கு?
விளக்கமா, வேண்டும், ஐயோ!'
என்றார்!
'கிராப்பா அடிக்கப் பாக்கிறே!'

தணலழகன் கோபத்தோடு இரைந்தான்!
பரமநம்பி
பவ்வியமாக
இனிய மெல்லிய
குரலில் பேசத் தொடங்கினார்!

எந்த ஒன்றை
நிஜமாக இல்லை என்று
எவன்
நிச்சயமாக நம்புகிறானோ,
அவன்
அந்த
'இல்லாத ஒன்றை'ப் பற்றி
இம்மியும் சந்தேகப்படவே மாட்டான்!
எந்த ஒன்றை
உருவமாகவோ
அருவமாகவோ
நிஜமாக
நிச்சயமாக உண்டு
என்று
எவன் நம்புகிறானோ
அவன்
அந்த
'இருக்கும் ஒன்றை' ப்பற்றி
அணுவளவும்

அவநம்பிக்கை
கொள்ளவே மாட்டான்!
நீங்களோ,
'நிரீஸ்வரவாதம்' என்ற பெயரில்
நீண்ட நெடுங்காலமாக
'இல்லை!' என்ற
ஒரே பல்லவியை
ஓயாமல் பாடிக் கொண்டிருக்கிறீர்கள்!
வெறும்
உதட்டோசையாகவே
அது ஒலித்துக் கொண்டிருக்கிறது!
நன்றாக கவனியுங்கள்!
நண்பர்களே!
நன்றாக கவனியுங்கள்!
வெளி அறையில்-
'கடவுள் இல்லை' என்று
உறுதியாக
உண்மையாக
முடிந்த முடிவாக
நம்புபவர்கள் மட்டும்
உள்ளே இருங்கள்!
மற்றவர்கள் வெளியே
போய் விடுங்கள்!
என்று
நான் கேட்டேன் அல்லவா?

அப்போதே
'கடவுள் இல்லை' என்று
நீங்கள்
நிஜமாகவே
நிச்சயமாக
நம்புபவர்களாக
இருந்திருந்தால்-
மற்றவர்களுக்கு முந்தி
நீங்கள் தானே
வெளியே
ஓடி இருக்கவேண்டும்!
ஓடவில்லையே!
ஆண்டவனை
நான் காட்டுவேன் என்றதும்
நான் முந்தி
நீ முந்தி
என்று
இங்கே வந்து விட்டீர்களே!
கடவுளை
நான் காட்ட வேண்டும்
என்று
நீங்கள் பிடிவாதமாக
பிள்ளைத் தனமாக
வாதமிடுவதிலிருந்து
உங்களை அறியாமலே

அந்த மெய்ப்பொருளை
அதன்
நிலைபேறுடைய
பேருண்மையை
நீங்கள்
ஒப்புக்கொண்டு விட்டீர்கள்
என்று தானே, அர்த்தம்!

கவிஞர் கிடக்கட்டும்!
அவர்
கற்பனைக்காரர்!
பொய்களையே
மெய்யாக்கி ரஸிப்பவர்!
எப்போதும்
ஏதோ ஒரு போதையில்
கனவுகளையே
அசை போட்டுக் கொண்டிருப்பவர்!
லௌகீக அலர்ஜிகளால்
இறைமையை
எட்டிப் பார்க்க
சந்தர்ப்ப
துர்ப்பாக்கியசாலி!

ஆனால் -
இந்த

விஞ்ஞானப்
பிள்ளையாண்டான் கூடவா
இப்படித் தடம் மாறி -
தடுமாற வேண்டும்...?

ஐயோ! ஆண்டவனே...!
எப்போதோ
மூத்த மூத்த
நூற்றாண்டுகளில் -
யார் யாரோ
கண்டு தெளிந்த
அல்லது
கண்டு தெளியாமலே போய்விட்ட
பேரண்ட -
பிரபஞ்ச ஒட்ட -
இயல்புகளை எல்லாம்
செரித்து ஜீரணித்து
முன்வைத்துக் கொண்டு
மூளையைச் சூடாக்கி -
புதிய புதிய
கண்டுபிடிப்புகளுக்கெல்லாம்
மகாமகத்துவமான
வித்தையல்லவா
விஞ்ஞானம்!

அப்படி இருக்கும்போது
அண்ட பேரண்ட
ஆதிநாயகனை

படைப்பனைத்திலும்
எங்கும் எதிலும்
எப்போதும்
நீக்கமற நிறைந்திருக்கும்
பிதா மூர்த்தியான
பெரும் பேரிறைவனை
ஏனையோருடன் கூடி
ஏளனப்படுத்தி
'இல்லை' ஆக்க முயல்வதும்
எதிர்வாதம் செய்வதும்
துரோகம் நிறைந்த
துஷ்டத்தனம் அல்லவா!

ஏ... விஞ்ஞானப் பையா...!
நீ
இந்த
வைய நெடும்புவியை
வளமாக்கலாம்!
வாழ்க்கையின்
பகட்டு வசதிகள் ஆயிரம்
படைத்துத் தரலாம்!

ஏன் -
'சாவை'க்கூட

சாகடிக்கும் முயற்சியில்
ஒருநாள்
நீ
விஞ்ஞான வெற்றி பெறலாம்!

ஆனால் -
ஜீவகோடிகளின்
'ஆத்மா'வினுடைய
ஒரே ஒரு
அணுத்துளியைக் கூட
நீ
படைத்து விடமுடியாது!

உனது விஞ்ஞானத்துக்கு
ஆத்ம பிரக்ஞை
அறவே கிடையாது!

அந்த
ஆத்ம உணர்வு
இல்லாத எதுவும்
இறுதியில்
துல்லியமாய்
தோற்றுபோகும்!

ஆகவே -
என்
அன்பு மகனே!
அறிவுமொக்கே!
'விஞ்ஞானம்' என்ற
வெளிப்பயணத்தை
'மெய்ஞானம்' என்ற
அசாதாரணமான
ஆழம் காணமுடியாத
உள்வெளி பயணத்தோடு
உரசவிடாதே!
ஒன்றுபடுத்தாதே!

இன்னும் சொன்னால் -
உனது விஞ்ஞானத்துக்கு
எங்கள் மெய்ஞானமே
'ஏ, பி, சி, டி!'
நம்பு மகனே!
நம்பு!

போதும் இவ்வளவு!
புறப்படுங்கள் நண்பர்களே!
உங்களுக்குள்ள
கடமைகளையும்
காரியங்களையும்
அக்கறையோடும்
ஆசையோடும்

தூய்மையோடும் செய்து
அவனியை
வாழ வையுங்கள்!
அதுவே
மகத்தான
மகேஸ்வர பூஜை!
மகா வழிபாடு!
இத்துடன் முடிக்கிறேன்
இனியவர்களே!

எனது அன்பு நன்றி!

இருவரைத் தவிர
ஏனையோர் கலைந்தனர்!
இளம் விஞ்ஞானி
தெளிவோடு நின்றான்!

இளங்கவிஞன்
ஜன்னி தெளிந்த
கண்ணீரோடு நின்றான்!

"மன்னியுங்கள் அய்யா!"
என்று
பரமநம்பியின்
பாதங்களைத் தொட்டு
வணங்கினான்!

அவனை
தோள் தொட்டுத் தூக்கி
''நீ ஏற்கெனவே
மன்னிக்கப்பட்டு விட்டாய் அப்பா!
விழிகளின் வழியே
பாவங்கள்தான்
வழிகின்றனவே!''

அவரை
இடைமறித்த
இளம் விஞ்ஞானி
''உங்களைத் தோற்கடிக்க
ஓடி வந்தேன் அய்யா!
தோற்றுப் போனேன் நான்!
ஆனாலும்
வெற்றியின்
வாசனையே
எனது தோல்வியில்
வழிகிறது,
வணக்கம்!

விஞ்ஞானியும்
வெளியேறினான்!

அப்போது -
அடுக்களையை விட்டு
கவிஞனும்

பரமநம்பியும்
வெளிக்கூடத்துக்கு

அப்போதுதான் -
கவிஞன்
அந்தக்கூடத்தை
அதிசயம் தழும்ப
உற்றுஉற்றுப் பார்த்தான்!

பூஜா பீடம் போன்ற
சற்று உயர்ந்த
ஒரு மேடையில்
குத்து விளக்கொன்று
கோலச்சுடர்
உமிழ்ந்தபடி

தீபமிட்டுக் கொண்டிருந்தது!

மேடையில்
சில நூல்கள்...
மேலட்டைகளில்
மனிதேஸ்வரனின்
மோகனப் புன்னகை
முகிழ்த்துக் கொண்டிருந்தது!

மேடைக்கு மேலே
சுவரில் மூன்றே மூன்று
படங்கள்...

அவை -
கடவுள் படங்கள் அல்ல! -

ராட்டையோடு ஒன்று!
நவகாளி ரத்தவீதியில் ஒன்று!
மார்பில் குண்டு காயங்களை
மறைக்கும்
மாலைக் குவியலோடு ஒன்று

அப்படியே -
அதிர்ந்துபோய்
பாறையானான்
கவிஞன்!
அவனது
இமைகளோடு
இணைந்து
இப்போது
இன்னொன்றும்
அவனுள்
அழத் தொடங்கியது!

அது -
அவனுக்குள்
புதிதாக
பிரதிஷ்டையாகி விட்ட
'ஆத்மா!'







● சங்ககால இலக்கியங்களையும் சிலப்பதிகாரம், திருக்குறள் போன்றவைகளையும் படிக்க உங்களுக்கு உந்துசக்தியாக இருந்தது எது?

❖ இலக்கியத்துறையில் என் திறனை வளர்த்துக் கொள்ள துணை நின்றவை அண்ணாவின் எழுத்தோவியங்களும், புரட்சிக் கவிஞரின் கவிதைகளும் என்பதை மறக்கமுடியாது. கவிஞர்சுரதா, கவிஞர் மாவெண்கோ (வ.கோ.சண்முகம்), கவிஞர் கா.மு.ஷெரீஃப் ஆகியோருடன் நெருங்கிப்பழகும் மாணவப்பருவத்து சூழ்நிலையும், உந்துசக்தியாக இருந்தது என்பதை இப்போது நினைத்தாலும் நெஞ்சு இனிக்கிறது!

முத்தமிழறிஞர்'
தமிழக முதல்வர்
டாக்டர் கலைஞர் மு.கருணாநிதி
('கலைஞர் முதல் கலாப்ரியா வரை' - நேர்காணல் தொகுப்பு நூல் - 1997)

